கணபதி துணை.

# சதாசாரக்கவித்திரட்டு.

யாழ்ப்பாணத்துக்

கந்தரோடை

நியாயப்பிரதிநிதி

ஸ்ரீமாந். சி. பொன்னம்பலபிள்ளையவர்கள்

கேட்டுக்கொண்டபடி

சுன்னாகம்

அ. குமாரசுவாமிப்பிள்ளையவர்களால்

பலநூல்களிலுமிருந்து

கோவைசெய்யப்பட்டு

வண்ணார்பண்ணை

க. கார்த்திகேயபிள்ளையால்

கோக்குவில்

சோதிடப்பிரகாசயந்திரசாலையில்

அச்சிற்பதிப்பிக்கப்பட்டது.

சார்வரி௵ ஆனி௴.

# உபக்கிரமணிகை.

இவ்வுலகிலுள்ள உயிர்களுக்கு இகபர சுகங்களை இனிதுபயப்பன வென்று யாவராலுஞ் செயற்பாலன புண்ணியங்கள் என்பதும், இரண்டினுந் துன்பம் பயப்பனவென்று தவிர்தற்பாலன பாவங்கள் என்பதுஞ் சமயவாதிகளாயுள்ளார் எவர்க்குஞ் சம்மதமேயாம். ஆதலின்; இதமான நீதியுபதேசங்களைக் கூறும் நீதிபாடங்களும் எவராலுங் கொள்ளத்தக்கனவே.

தமிழ்ப்பாடையிலுள்ள சாதாரண நீதிநூல்களையும், சமயநூல்களையும், பிறவற்றையுங் கற்றுணராதார் சிலர் தமிழ்ப்பாடையிலே சன்மார்க்கபோதனை என்பது சற்றுமில்லை என்கின்றனர். தமிழ்ப்பாடையிலே திருக்குறள், நாலடியார், சிறுபஞ்சமூலம் என்பவை முதலாக எத்தனையோ சாதாரணமான நீதிநூல்கள் இருக்கின்றன. ஆருகதம், பௌத்தம் முதலிய சமய சாத்திரங்களுள்ளும் எத்தனையோ நீதிபாடங்களிருக்கின்றன. சைவநூல்களாகிய சித்தியார், ஞானாமிர்தம் முதலியவைகளுள்ளும் எத்தனையோ நீதிபாடங்களிருக்கின்றன. இராமாயணம், பாரதம், இரகுவமிசம், கந்தபுராணம், கூர்மபுராணம் முதலியவைகளுள்ளும் ஆங்காங்கு வரும் நீதிபாடங்களுமோ மிகப் பல.

நயோபதேசமாய் யாவர்க்கும் நற்பலன் கொடுக்குமென்று இந்நூல்களிலிருந்து சில கவிகளும், முற்றும் நீதிகவிகளாகத் திரட்டிய புறத்திரட்டு என்னும் பழைய நூலினின்று சில கவிகளுமாக ஏறக்குறைய நூறுகவிகள் வரையிலே எடுத்துக் கோவைசெய்து, தருமம் முதலிய விடயங்களாக வகுத்து, சதாசாரக்கவித்திரட்டு என்னும் நாமதேயங் கொடுத்து இதனைப் பகிரங்கமாக்கினேம்.

சுன்னாகம்: இங்ஙனம்,
சார்வரிஞு வைகாசிமீ. அ. குமாரசுவாமிப்பிள்ளை.

## விடயாநுக்கிரமணிகை.



## சாத்திராநுக்கிரமணிகை.

உ

சிவமயம்.

# சதாசாரக்கவித்திரட்டு.

## பரப்பிரமவணக்கம்.

திருவந்த தொல்லைப் புவனத்தொடு தேவர்போற்றிப்
பெருவந்தனைசெய் தறிதற்கரும் பெற்றி யெய்தி
அருவந்தனையு முருவத்தையு மன்றி நின்றான்
ஒருவன் றனது பதந்தன்னை யுளத்துள் வைப்பாம்.

## தருமம்.

—:o:—

### கந்தபுராணம்.

தருமமென் றொருபொரு ளுளது தாவிலா
இருமையி னின்பமு மெளிதி னாக்குமால்
அருமையில் வரும்பொரு ளாகு மன்னதும்
ஒருமையி னோர்க்கலா லுணர்தற் கொண்ணுமோ. (௧)

தருமமே போற்றிடி னன்பு சார்ந்திடும்
அருளெனுங் குழவியு மணையு மாங்கவை
வரும்வழித் தவமெனு மாட்சி யெய்துமேற்
றெருளுறு மவ்வுயிர் சிவனைச் சேருமால். (௨)

## ௩௨. தருமம்.

—:o:—

### திருக்குற்றலப்புராணம்.

ஆதுலர் சாலை சோலை யாவின்வா யுறைகண் ணாடி
ஓதுவார்க் குணவு தண்ணீ ருறுபந்தர் மடந்த டாகம்
கோதிலா வுரிஞ்சி சுண்ணங் கொலையுயிர் விடுத்த லேறு
மாதலைக் கெண்ணெய் கண்ணோய் மருந்துநன் மகப்பால் சோறு.

அறுசம யத்தோர்க் குண்டி யழிந்தோரை நிறுத்த லட்டூண்
பிறரறங் காத்த லையம் பெண்போக மகப்பே றுய்த்தல்
நறியதேன் விலங்கூண் வண்ணா னாவிதன் சிறைச்சோ றுதி
மறுதலத் தறமெண் ணான்கு மனையறத் திவ்வூர் நல்கும். (௨)

## சோடசதானம்.

—:o:—

பூதானம் பரிதேர் யானை பொன்வெள்ளி விளைவு கன்னி
காதானந் தயில மெள்ளுக் கலைபணி யடிமை யில்லம்
கோதான மன்ன தானங் கூறுமெண் ணிருதா னத்தி
னேதான பலனு மன்ன மிட்டுண்பார்க் கருளு மிவ்வூர். (௫)

## வித்தியாதானம்.

—:o:—

சூதசங்கிதை.

மானவர்க் கறிவினை வயக்கி யின்பறு
மானமார் முத்தியில் வைக்கு நீர்மையாற்
தானமெவ் வகையுளுந் தக்க வித்தியா
தானமே சிறந்தது சாற்றுங் காலையே. (௬)

சிறுபஞ்சமூலம்.

குளந்தொட்டுக் கோடு பதித்து வழிசீத்
துளந்தொட்டு மூவய லாக்கி—வளந்தொட்டுப்
பாகு படுகிணற்றோ டென்றிவை பாற்படுத்தான்
ஏகுஞ் சுவர்க்க மினிது. (எ)

ஞானாமிர்தம்.

பொய்ப்பொருள் புணர்க்கு மைப்பொறி யுள்ளும்
உள்ளச் செய்தி தெள்ளிதிற் கிளப்பின்
இருடீர் காட்சி யருளொடு புணர்தல்
பெரும்பொறை தாங்கல் பிறன்பொருள் விழையாமை
செய்தநன் றறிதல் கைதவங் கடிதல்
பால்கோ டாது பகலிற் றோன்றல்
மான மதாணி யாணியிற் றாங்கல்
அழுக்கா றின்மை யவாவிற் றீர்தல்
அருந்துய ருயிர்கட் கிருந்த காலை
அழறோய் வுற்ற மெழுகே போலக்
கழலு நெஞ்சிற் கையறத் தினைதல்
பன்னருஞ் சிறப்பின் மன்னுயிர்த் தொகைகட்
கறிவும் பொறியுங் கழி பெருங் கவினும்
பெறற் கருந் துறக்கமு மிறப்ப வூங்குத்
தம்மினும் வேண்டுமென் றெண்ணும் பெருங்குணம்
வாக்கொடு சிவணிய நோக்கின் மீக்கொள
அறம்பெரி தறைதல் புறங்கூ றாமை
வாய்மை கல்வி தீமையிற் றிறம்பல்
இன்மொழி யிசைத்தல் வன்மொழி மறுத்தல்

அறிவுநூல் விரித்த லருமறை கழறல்
அடங்கிய வறைதல் கடுஞ்சொல் விடுத்தல்
பயனுள படித்தல் படிற்றுரை விடுத்தல்
காயத் தியைந்த வீயா வினையுள்
அருந்தவந் தொடங்க திருந்திய தாகம்
கொடைமடம் படுதல் படைமடம் படாமை
அமரர்ப் பேண லாகுதி யருத்தல்
ஒழுக்க மோம்பும் விழுப்பெருங் கிழமை
உடம்பிடி யேந்தி யுடறடிந் திமோ
ரடைந்த காலை யவணிய துயரம்
தோரா ரல்லர் தெரிந்து மாருயிர்
பெரும்பிறி தாக விரும்பிண மிசைஞரின்
ஓராங்குப் படாரா மாசில் காட்சி
ஐம்பெரும் பாதகத் தாழி நீந்தல்
இந்தியப் பெரும்படை யிரிய நூறும்
வன்றறு கண்மை வாளிட் டாங்கு
கோவன செய்யினு மேவன செய்தல்
தவச் சிறி தாயினு மிகப்பல விருந்து
பாத்தூண் செல்வம் பூக்கம ழிரும் பொழின்
தன்மனைக் கிழத்தி யல் லதை பிறர்மனை
அன்னையிற் றீரா நன்ன ராண்மை
கார்கோ ளன்ன கயம்பல கினைத்தல்
கூவ றொட்ட லாதுலர் சாலை
அறங் கரை நாவி னுன் றோர் பள்ளி
கடவுட் கண்ணிய தடவுநிலைக் கோட்டம்
இனையவை முதலா வினைவருந் திறத்த
புரத்தன் மாதோ வறத்துறை மறத்துறை
இவற்று வழிப்படாஅ தெதிர்வன கெழீஇ
உஞற்றெனை மொழிப வுணர்ந்திசி னோரே. (அ)

அறநெறிச்சாரம்.

அம்மைத் தாஞ்செய்த வறத்தின் வருபயனை
இம்மைத்துய்த் தின்புறு கின்றவர்—உம்மைக்
கறஞ்செய்யா தைம்புலனு மாற்றுத னல்லாக்
கறந்துண்டஃ தோம்பாமை யாம். (கூ)

புறநானூறு.

பல்சான் றீரே பல்சான் றீரே
கயன்முள் ளன்ன நரைமுதிர் திரைகவுட்
பயனின் மூப்பிற் பல்சான் றீரே
கணிச்சிக் கூர்ம்படைக் கடுந்திற லொருவன்
பிணிக்குங் காலை யிரங்குவிர் மாதோ

நல்லது செய்த லாற்றீ ராயினும்
அல்லது செய்த லோம்புமி னதுதான்
எல்லாரு முவப்ப தன்றி
நல்லாற்றுப் படூஉ நெறியுமா ரதுவே. (௧0)

சிவதருமோத்தரம்.

பாம்பழல் வாயினுற் பற்ற மண்டுகந்
தேம்பிடுந் துயருறுஞ் சீவன் றேயுநாள்
ஓம்பிட வல்லரோ வுற்ற மற்றையார்
போம்பொழு தருந்துணை புரிந்த புண்ணியம். (௧௧)

ஆசிரியமாலை.

எளிதென விகழா தரிதென வரையா
துமக்குநீர் மல்குதி ராயின் மனத்திடை
நினைப்பினும் பிறர்க்கு மொழியினும் வளரும்
தொழிற்படிற் சினைவிடூஉப் பயக்கு முணர்த்தின்
இவணு மும்பருந் துணையே யதனுல்
துறைதொறுந் துறைதொறு நோக்கி
அறமே நிறுத்து மறிந்திசி னோரே. (௧௨.)

---

## கொல்லாமை.

—:o:—

தாயுமானவர்.

கொல்லா விரதங் குவலயமெல் லாமோங்க
எல்லார்க்குஞ் சொல்லுவதென் னிச்சை பராபரமே. (௧௩)

பதிபசுபாசவிளக்கம்.

அம்மா வெனவலற வாருயிரைக் கொன்றருந்தி
இம்மா நுடரெல்லா மின்புற் றிருக்கின்றார்
அம்மா வெனுஞ்சத்தங் கேட்டகன்ற மாதவர்க்கும்
பொய்ம்மா நிரயமென்றுற் புசித்தவர்க்கென் சொல்லுவதே. ()

இராமவவதாரம்.

கொன்றவன் குறைத்தவன் கொணர்ந்து விற்றவன்
ஒன்றிய பொருள்கொடுத் துவந்து கொண்டவன்
நன்றடு மடைமக னுவிற் பெய்தவன்
என்றிவ ரறுவரு நரக மெய்துவார். (௧௫)

பாரதவெண்பா.

இந்நோய் நமக்குண்டென் றெண்ணுதே யெவ்வுயிரு
முன்னேவக் கொன்றுண்ணு மூர்க்கர்தா—மெந்நோவும்
பண்ணப் படுநரகிற் பாவிகளிற் பாவிகளென்
றெண்ணப் படுவா ரிசைந்து. (௧௬)

---

## பொறுமை.

—:୦:—

### விநாயகபுராணம்.

வெறுப்ப வொருவன் காரணத்தான் மிக்க மடத்தாற் புரிபிழையைப்
பொறுப்பி னதுவே பேரறமாம் புகழு நிறையு மிக வளருங்
கறுப்பொன் றறியா வறிவினர்கள் கருத்தின் மகிழ்ச்சி யுளவாகும்
ஒறுப்பின் வருவ தொன்றில்லை யதனுற் பொறுமை யுயிர்த்துணையாம்.

### நீதிநூல்.

உணையொருவ ரிகழ்ந்தனரே லேதுக்கா விகழ்ந்தனரென் றுன்னி யுன்பால், தினையளவு தப்புளதே லதைநீக்காய் தப்பின்றேற் சினமுறு தே, கணகழையை வேம்பென்னிற் கழைக்குமொரு குறையுண்டோ கல்லின் மோதித், தனையுடைப்போர்க் குணவுதருந் தேங்காய்போ லெவர்க்குநன்மை தனைச்செய்வாயே. (௧௮)

### நாலடியார்.

கூர்த்துநாய் கௌவிக் கொளக்கண்டுந் தம்வாயாற்
பேர்த்துநாய் கௌவினு ரீங்கில்லை—நீர்த்தன்றிக்
கீழ்மக்கள் கீழாய சொல்லியக்காற் சொல்பவோ
மேன்மக்க டம்வாயான் மீட்டு. (௧௯)

---

## வாய்மை.

—:o:—

### இரங்கேசர்வெண்பா.

மூவ ரரிச் சந்திரற்கு முன்னின்ற காட்சியைப் போல்
ஏவர் பெற்றார் மேனு ளிரங்கேசா—பூவின்
மனத்தொடு வாய்மை மொழியிற் றவத்தொடு
தானஞ்செய் வாரிற் றலை. (௨௦)

### மெய்ம்மொழியியல்.

சத்திய முரைக்க நாளுஞ் சகலபல் லுயிர்க ளுக்கும்
நித்தமு மிதமே செய்க நினைக்குக சிவத்தை யென்றும்
அத்தன்வே தாக மத்தி லருளிய பொருளிம் மூன்றும்
எத்திறத் தோர்களுக்கு மெம்மதங் களுக்கு மிட்டம். (௨௧)

### பிரமோத்தரகாண்டம்

வாய்மை தப்பி னூர்க ளிந்த மாநி லத்தி லீனராய்த்
தீமையுற்று மேலுளோர் பழிக்கவே திரிந்துபின்
தூய்மையற்ற கும்பியுட் டுளைந்தழுங்கு வாரெனு
ஆய்மறுப் பகர்ந்தவேத சாகை முற்று மறையுமே. (௨௨)

வளையாபதி.

பொய்யி னிங்குமின் பொய்யன்மின் பூண்டுகொண்
டைய மின்றி யறநெறி யாற்றுமின்
வைகல் வேதனை வந்துற லொன்றின்றிக்
கவ்வை யில்லுல கெய்துதல் கண்டதே. (உங)

பாரதம்.

அன்னிய கிளையு மில்லு மரும்பெரு மகவு மன்புந்
திண்ணிய சீரு மிக்க செல்வமுந் திறலுந் தேசும்
எண்ணிய பொருள்கள் யாவு மியற்றிய தவமு மேனைப்
புண்ணிய மனைத்துஞ் சேரப் பொய்மையாற் பொன்று மன்றே.

சிறுபஞ்சமூலம்.

இம்மை நலனழிக்கு மெச்சங் குறைபடுக்கும்
அம்மை யருநரகத் தாழ்விக்கும்—மெய்ம்மை
அறந்தேயும் பின்னு மலர்மகளை நீக்கும்
மறந்தேயும் பொய்யுரைக்கும் வாய். (உரு)

---

## புறங்கூறாமை.

—:o:—

அறநெறிச்சாரம்.

முன்னின் றொருவன் முகத்தினும் வாயினும்
கன்னின் றுருகக் கலந்துரைத்துப்—பின்னின்
றிழித்துரைக்குஞ் சான்றோரை யஞ்சியே தேவர்
விழித்திமையார் நின்ற நிலை. (உசு)

வளையாபதி.

ஆக்கப் படுக்கு மருந்தளைவாய்ப் பெய்விக்கும்
போக்கப் படுக்கும் புலைநரகத் துய்ப்பிக்கும்
காக்கப் படுவனவு மிந்திரிய மைந்தினும்
நாக்கல்ல தில்லை நனிவெல்லு மாறே. (உஎ)

திருக்குறள்.

அறங்கூறா னல்ல செயினு மொருவன்
புறங்கூறா னென்ற லினிது. (உஅ)

---

## களவுசெய்யாமை.

—:o:—

நான்மணிக்கடிகை.

கள்ளாமை வேண்டுங் கடிய வருதலால்
தள்ளாமை வேண்டுந் தகுதி யுடையன
நள்ளாமை வேண்டுஞ் சிறியரோ டியார்மாட்டுங்
கொள்ளாமை வேண்டும் பகை. (உகூ)

நீதிநூல்.

கன்னம் வைத்தல்செல் லாப்பணம் வழங்குதல் கள்ளம்
மன்னு சீட்டையுண் டாக்குதல் கைலஞ்சம் வாங்கல்
என்னும் யாவுமே களவதா மித்தொழிற் கியைந்தோர்
மன்ன ராக்கினை வசைநர கடைந்துவா டுவரால். (௯0)

## கள்ளுண்ணாமை.

—:o:—

விநாயகபுராணம்.

அறிவை யழிக்குஞ் செயலழிக்கு மழியா மானந் தனையழிக்குஞ்
செறியு மறிஞர் மதியாத செருக்கை விளைக்கு மீன்றாளும்
முறியும் வெறுப்பு மிகவிளைக்கு முனிவு விளைக்கும் பகையஞ்சாக்
குறிகள்விளைக்கு நகைவிளைக்குங் கொள்ளேல்கள்ளுண் டலைமைந்தா.

இராமாயணம்.

வஞ்சமுங் களவும் பொய்யு மயக்கமு மரபில் கொட்புந்
தஞ்சமென் றோரை நீக்குந் தன்மையுங் களிப்புந் தாங்குங்
கஞ்சமேல் லணங்குந் தீருங் கள்ளினை லருந்தி னோரை
நஞ்சமுங் கொல்வ தல்லா லெரகினை நல்கா தன்றே. (௯௨)

கூர்மபுராணம்.

கள்வினை பகர்வோர் கள்ளினை நுகர்ந்தோர் கள்ளருந் துதற்குடன் படுவோர்
கள்ளருந் தினரை மகிழுநர் நரகிற் கற்பகா லங்கிடந் தழுந்தி [வோர்
எள்ளுறுந் தீய மலப்புழு வாகி மலத்தினை நுகர்ந்துபின் னிறந்து
விள்ளருங் கொடிய ரவுர நரகின் மீட்டுமீட் டுழன் றுநாள் கழிப்பார்.()

## பரதாரம் விரும்பாமை.

—:o:—

வளையாபதி.

பெண்ணி னாகிய பேரஞர் பூமியுள்
எண்ண மிக்கவ ரெண்ணினு மெண்ணிலார்
பின்னி நின்ற பெருவினை மேல்வரும்
என்ன தாயினு மேதில்பெண் ணீக்குமின். (௯௫)

இராமாயணம்.

ஈர மாவது மிற்பிறப் பாவதும்
வீர மாவதுங் கல்வியின் மெய்ந்நெறி
வார மாவது மற்றொரு வன்புணர்
தார மாவதைத் தாங்குந் தருக்கதோ. (௯௬)

திருக்குறள்.

பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்
கறனன்றோ வான்ற வொழுக்கு. (௩௭)

தணிகைப்புராணம்.

இந்திரன் பிறனில் காமுற் றிழிகுறி முழுதும் பெற்றான்
சந்திரன் குரவ னில்லாட் டழுவிவெந் துயரத் தாழ்ந்தான்
அந்தரத் தவரு மண்மே லவருமிவ் வாறு பட்ட
வெந்துயர்க் களவின் றுக்கை நோய்க்கும்வே றவதி யின்றே. ()

## வேசியரைவிரும்பாமை.

—:o:—

பட்டணத்தடிகள்பாடல்.

நாவார வேண்டும் விதஞ் சொல்லு வாருனை நான் பிரிந்தாற்
சாவேனென் றேயிருந் தொக்கவுண் பார்கள்கை தான் வரண்டாற்
போய் வாரு மென்று நடுத்தலைக் கேகுட்டும் பூவையருக்
கீவார் தலைவிதி யோவிறை வாகச்சி யேகம்பனே. (௩௯)

வளையாபதி.

நாயும் போல்வர்பல் லெச்சிலு நச்சலாற்
றீயும் போல்வர்செய்ந் நன்றி சிதைத்தலால்
நோயும் போல்வர் நுகர்தற் கருமையால்
வேயும் போல்வரிவ் வேனெடுங் கண்ணினார். (௪0)

பேரூர்ப்புராணம்.

இளமையே கவினே கீர்த்தி யெறுழ்கலை யிங்கி தத்தின்
வளமையே யன்பே நல்ல வருணமே யேக போகம்
விளைவுசெய் திறனே மற்று மிக்குள ரேனும் பொன்னிற்
றளர்வின ராயி னஞ்சே யிருமாதத் தைய லார்க்கு. (௪௧)

## சூதுவிரும்பாமை.

—:o:—

ஆத்திசூடிவெண்பா.

தோராத நூற்றுவருந் தோற்றபஞ்ச பாண்டவரும்
பாரே யகன்றுபட்ட பாரதம்பார்—பேராண்மை
வற்றாத புன்னைவன மாகடலே மிக்கசெல்வம்
பெற்றாலுஞ் சூதுவிரும் பேல். (௪௨)

சிவசிவவெண்பா.

வெற்றிநளன் சூதாடி வீடுவிட்டுக் காடுறைந்தான்
சிற்றிடை யுந்தானுஞ் சிவசிவா—சுற்றும்
உடைசெல்வ மொண்ணொளி கல்வியென் றைந்தும்
அடையாவர மாயங் கொளின். (௪௩)

### நைடதம்.

ஐயநீ யாடுதற் கமைந்த சூதுமற்
றெய்துநல் குரவினுக் கியைந்த தூதுவெம்
பொய்யினுக் கருந்துணை புன்மைக் கீன்றதாய்
மெய்யினுக் குறுபகை யென்பர் மேலையோர். (௬௪)

### நளவெண்பா.

உருவழிக்கு முண்மை யுயர்வழிக்கும் வண்மைத்
திருவழிக்கு மானஞ் சிதைக்கு—மருவும்
ஒருவரோ டன்பழிக்கு மொன்றல்ல சூது
பொருவரோ தக்கோர் புரிந்து. (௬௫)

### பாரதம்.

அடியு மாண்மையும் வலிமையுஞ் சேனையு மழகும்வென் றியுந்தத்தங்
குடியு மானமுஞ் செல்வமும் பெருமையுங் குலமு மின்பமுந்தேசும்
படியு மாமுறை யொழுக்கமும் புகழுமுண் பயின்றகல் வியுஞ்சேர
மடியு மான்மதி யுணர்ந்தவர் சூதின்மேல் வைப்பரோ மனம்வையார். ()

---

## நன்றிமறவாமை.

—:o:—

### திருக்குறள்.

எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லைச்
செய்ந்நன்றி கொன்ற மகற்கு. (௬௭)

### சேதுபுராணம்.

யாப்பின் மன்னிய நன்றி தன்னை விடுத்த தீமை யிதற்குயிர்
நீப்ப தேபரிகார மென்றிடு நீதி நூலரு டாதைதாய்
காப்பு நேர்கிலர் குரவர் தக்கிணை காதலோடு வழங்கிலார்
தீப்பவ வங்களு மாற்று நன்றயர் திங்கு நீங்குயிர் தீர்க்குமால். (௬௮)

---

## பெரியாரைப்பேணல்.

—:o:—

### நீநகரவெண்பா.

ஆடுபல தேடலா மானமத யானையொன்றைத்
தேட வரிதே நிககரா—நாடில்
அரியவற்று ளெல்லா மரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல். (௬௯)

### ஆசாரக்கோவை.

அரச னுபாத்யாய னுய்தந்தை தம்முன்
நிகரில் குரவ ரிவரைவ ரிவரிவரைத்
தேவரைப் போலத் தொழுதெழுக வென்பதே
யாவருங் கண்ட நெறி. (ருo)

## நடுவுநிலைமை.

—:o:—

### இராமாயணம்,

குலமுதற் றொன்மையுங் கலையின் குப்பையும்
பலமுதற் கேள்வியும் பலனு மெய்தினோர்
நலமுத னலியினு நடுவு நோக்குவார்
சலமுத லறுத்தருந் தருமந் தாங்கினோர். (ருக)

### ஔவையார்.

வழக்குடை யானிற்ப வலியானைக் கூடி
வழக்கை யழிவழக்குச் செய்தோன்—வழக்கிழந்தோன்
சுற்றமுந் தானுந் தொடர்ந்தழுத கண்ணீரால்
எச்ச மறுமென்றா லறு. (ருஉ)

### சிந்தாமணி.

வாரம் பட்டுழித் தீயவு நல்லவாந்
தீரக் காய்ந்துழி நல்லவுந் தீயவாம்
ஓரும் வையத் தியற்கையன் றோவெனா
விர வேனெடுங் கண்ணி விளம்பினாள். (ருங)

## சீவகாருண்ணியம்.

—:o:—

### ஞானவிளக்கம்.

வேங்கை புலான்மறுத்து வீடுற்ற தன்றியுமோர்
திங்ககன்ற நாரையுமீன் றின்னமற்—பூங்கயிலை
உற்றிருந்த தந்தோ வொருபுறவுக் காயரசன்
முற்றுமரிந் தீந்திலனோ முன். (ருச)

### பதிபசுபாசவிளக்கம்.

கலையெலா முணர்ந்தா னேனுங் கரிசறத் தெளிந்தா னேனும்
மலையென வுயர்ந்தா னேனு மனமய லகன்றா னேனும்
உலகெலாம் புகழப் பல்லோர்க் குதவிய கையனேனும்
இலகிய விரக்க மின்றேலெழுநர கடைவ னன்றே. (ருரு)

## பரோபகாரம்.

—:o:—

### கந்தபுராணம்.

என்னனு மோருதவி யாதொருவன் யார்க்கெனினுந்
தன்னன் முடிவதெனிற் றனே முடித்தறலே
சொன்னன் முடித்த லிடையாகுஞ் சொல்லுகினும்
பன்னண் மறுத்துப் புரிதல்கடைப் பான்மையதே. (ருசு)

உய்கை பொருளா வொருவர்க்கு மோருதவி
செய்கை யிலனேற் சிறியோன் கழித்தபகல்
வைக லனுவோ வறிதே யவன்வாழ்க்கை
பொய்கை மலர்ந்தகொட்டி போலப் பொலிந்துளதே. (ருஎ)

### இரகுவமிசம்.

வெடித்த டங்கயற் கண்ணியர் மைந்தர்வே தியர்கோ
நெடிற்கொ டுங்கொலை சூழ்ந்திட நீக்கருந் தீதிற்
படிற்ற ஞணையிற் காப்பது காத்தது பலியா
விடிற்ற னுவியை விடுத்திடா வேந்துமோர் வேந்தோ. (ருஅ)

---

## கொடை.

—:o:—

### பட்டணத்தடிகள்பாடல்.

பிறக்கும் பொழுது கொடுவந்த தில்லைப் பிறந்துமண்மே
லிறக்கும் பொழுது கொடுபோவ தில்லை யிடைநடுவிற்
சிறக்குமிச் செல்வஞ் சிவன்றந்த தென்று கொடுக்கறியா
திறக்குங் குலாமருக் கென்சொல்லு வேன்கச்சி யேகம்பனே. ()

### இராமாயணம்.

வெள்ளியை யாதல் விளம்பினை மேலோர்
வள்ளிய ராக வழங்குவ தல்லால்
எள்ளுவ வென்சில வின்னுயி ரேனுங்
கொள்ளுவ தீது கொடுப்பது நன்றால். (கூo)

### நீதிசாரம்.

ஓயாம லீபவர் பாவாணர் பாக்கொண் டுலகினிற்போர்
மாயாத சூரர் மநுநீதி வேந்தர் மறலிகையிற்
போயாவி பொன்றினு மெய்யாகு மிந்தப் புகழுடம்பை
வீயா தவரிவ ரைவர்கண் டாய்திரு வேங்கடனே. (கூக)

---

## உலோபம்.

—:o:—

திருக்குறள்.

ஈத்துவக்கு மின்ப மறியார்கொ ருமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர். (௬௨)

இராமாயணம்.

கட்டுரை யிற்றம கைத்துள போதே
இட்டிசை கொண்டற னெய்த முயன்றோர்
உட்டெறு வெம்பகை யாவ துலோபம்
விட்டிட லென்று விலக்கினர் தாமே. (௬௩)

## இன்சொற்கூறல்.

—:o:—

நீதிநெறிவிளக்கம்.

ஈகை யரிதெனினு மின்சொலினு நல்கூர்தல்
ஓகோ கொடிது கொடிதம்ம—நாகொன்று
தீவினைக் கம்மியனால் வாய்பூட் டிடப்படின்மற்
றுவா விவரென்செய் வார். (௬௪)

பழமொழி.

புன்சொல்லு நன்சொல்லும் பொய்யென் றுணர்கிற்பான்
வன்சொல் வழியராய் வாழ்தலு முண்டாமோ
புன்சொ லிடர்ப்படுப்ப தல்லா லொருவனை
இன்சொ லிடர்ப்படுப்ப தில். (௬௫)

## கோபம்.

—:o:—

திருகரவேண்பா.

ஆரா ருறவாகா ரார்வசமா கார்சினத்தைச்
சேரா திருக்கிற் றினகரா—கோராக
உள்ளிய வெல்லா முடனெய்து முள்ளத்தால்
உள்ளான் வெகுளி யெனின். (௬௬)

பதிபசுபாசவிளக்கம்.

கோபத்தாற் கௌசிகன் றவத்தைக் கொட்டினான்
கோபத்தா னகுடனுங் கோல மாற்றினான்
கோபத்தா லிந்திரன் குலிசம் போக்கினான்
கோபத்தா லிறந்தவர் கோடி கோடியே. (௬௭)

## ஒழுக்கம்.

—:o:—

### ஆசாரக்கோவை.

நன்றி யறிதல் பொறையுடைமை யின்சொலோ
டின்னாத வெவ்வுயிர்க்குஞ் செய்யாமை கல்வியோ
டொப்புர வாற்ற வறித லறிவுடைமை
நல்லினத் தாரோடு நட்ட லிவையெட்டுஞ்
சொல்லிய வாசார வித்து. (௬அ)

### வளையாபதி.

பொய்யன் மின்புறங் கூறன்மின் யாரையும்
வையன் மின்வடி வல்லன சொல்லிநீர்
உய்யன் மின்னுயிர் கொன்றுண்டு வாழுநாள்
செய்யன் மின்சிறி யாரொடு தீயன. (௬௯)

---

## மாநுடப்பிறவி.

—:o:—

### சிந்தாமணி.

பரவை வெண்டிரை வடகடற் படுநுகத் துளையுட்
டிரைசெய் தென்கட லிட்டதோர் நோன்கழி சிவணி
அரச வத்துளை யகவயிற் செறிந்தென வரிதால்
பெரிய யோகிகள் பிழைத்திவண் மாநுடம் பெறலே. (எ௦)

### பதிபசுபாசவிளக்கம்.

மக்க ளாக்கையிற் பிறத்தலே யரிது மற்றதினுந்
துக்க கூன்குரு டூமையைத் துறத்தலு மரிது
நற்கு லத்திடை வருதலு மரிது ஞானத்தான்
முக்க ணீசனுக் காட்படன் முற்றினு மரிதே. (எக)

---

## பெண்கள்.

—:o:—

### சிந்தாமணி.

பெண்ணெனப் படுவ கேண்மோ பீடில பிறப்பு நோக்கா
உண்ணிறை வுடைய வல்ல வொராயிரம் மனத்த வாகும்
எண்ணிப்பத் தங்கை யிட்டா லிந்திரன் மகளு மங்கே
வெண்ணெய்க்குன் றெரியுற் றுற்போன் மெலிந்துபின் னிற்குமன்றே.

## கற்புடைமையுங் கற்பின்மையும்.

—:o:—

### திருக்குற்றலப்புராணம்.

சிறுகாலை யட்டிபுக லருத்தியுறச் சமைத்தல்சுவை திருத்தியூட்டன், மறுகாலை பெண்ணுது விருந்தழைத்தன் மகப்பெறுதன் மடநாணச்சம், பெறுகாலை யின்புறுதன் முன்னுறங்கப் பின்னுறங்கல் பின்னெழுதல், உறுகாலை தொழுதெழுதல் பன்னிரண்டு மங்கைகர்க்கற் புடையோர் செய்கை. (எங)

### தண்டலையார்சதகம்.

அடுத்தமனை தொறுந்திரிவாள் கணவனுக்கு முன்னுண்பா ளடக்க மில்லாள், கடுத்தமொழி பேசிடுவாள் சிறுதனங்தே டுவெளிவலைக் கலந்து வாழ்தல், எடுத்தவிடைக் கொடியாரே தண்டலையா ரேயெவர்க்கு மின்பமாகக், குடித்தனமே செயவேண்டிப் பிடாரிதனைப் பெண்டுவைத்துக் கொண்டதாமே. (எச)

### இராமாயணம்.

யங்கையர் பொருட்டா லெய்து மாந்தர்க்கு மரண மென்றல்
சங்கையின் றுணர்தி வாலி செய்கையாற் சாலு மின்னும்
அங்கவர் திறத்தி னலே யல்லலும் பழியு மாதல்
எங்களிற் காண்டி யன்றே யிதற்குவே றுவமை யுண்டோ. (எரு)

---

## புத்திரர்.

—:o.—

### பாரதம்.

கல்லா மழலைக் கனியூறல் கலந்து கொஞ்சுஞ்
சொல்லா லுருக்கி யழுதோடித் தொடர்ந்து பற்றி
மல்லார் புயத்தில் விளையாடு மகிழ்ச்சி மைந்தர்
இல்லா தவர்க்கு மனைவாழ்வி னினிமை யென்னும். (எசு)

### சூளாமணி.

தொக்கின மலர்துதை விலாத சோலையும்
புக்கிளந் தாமரை நகாத பொய்கையும்
மிக்கிளம் பிறைவிசும் பிலாத வந்தியும்
மக்களை யிலாததோர் மனையு மொக்குமே. (எஎ)

### வளையாபதி.

பொறையிலா வறிவு போகப் புணர்விலா விளமை மேவத்
துறையிலா வனச வாவி துகிலிலாக் கோலத் தூய்மை
நறையிலா மாலை கல்வி நலமிலாப் புலமை நன்னர்ச்
சிறையிலா நகரம் போலுஞ் சேயிலாச் செல்வ மன்றே (எஅ)

---

## கல்வி.

—:o:—

### நீதிநெறிவிளக்கம்.

அறம்பொரு ளின்பமும் வீடும் பயக்கும்
புறங்கடை நல்லிசையு நாட்டு—முறுங்கவலொன்
றுற்றுழியுங் கைகொடுக்குங் கல்வியி னூங்கில்லைச்
சிற்றுயிர்க் குற்ற துணை. (எகூ)

### நான்மணிக்கடிகை.

கற்கக் கழிமட மஃகு மடமஃகப்
புற்றந்தீர்ந் திவ்வுலகிற் கோளுணருங் கோளுணர்ந்தாற்
றத்துவ மாய நெறிப்படரு மந்நெறி
இப்பா லுலகத் திசைநிறீஇ யப்பால்
உயர்ந்த வுலகம் புகும். (அ0)

### சிந்தாமணி.

கைப்பொருள் கொடுத்துங் கற்றல் கற்றபின் கண்ணு மாகும்
மெய்ப்பொருள் விளக்கு நெஞ்சின் மெலிவிற்கோர் துணையு மாகும்
பொய்ப்பொருள் பிறகள் பொன்னும் புகழுமாந் துணைவி யாக்கும்
இப்பொரு ளெய்தி நின்றீ ரிரங்குவ தென்னை யென்றான். (அக)

### சிறுபஞ்சமூலம்.

மயிர்வனப்புங் கண்கவரு மார்பின் வனப்பும்
உகிர்வனப்புங் காதின் வனப்புஞ்—செயிர்தீர்ந்த
பல்லின் வனப்பும் வனப்பல்ல நூற்கியைந்த
சொல்லின் வனப்பே வனப்பு. (அ௨)

---

## கல்லாமை.

—:o:—

### திருமந்திரம்.

கல்லாத மூடரைக் காணவு மாகாது
கல்லாத மூடர்சொற் கேட்கக் கடனன்று
கல்லாத மூடருக்குக் கல்லாதார் நல்லராங்
கல்லாத மூடர் கருத்தறி யாரே. (அ௩)

---

## கல்விச்செருக்கு.

—:o:—

### ஔவையார்.

வான்குருவி யின்கூடு வல்லரக்குத் தொல்கறையான்
தேன்சிலம்பி யாவர்க்குஞ் செய்யரிதால்—யாம்பெரிதும்
வல்லோமே யென்று வலிமைசொல வேண்டாங்காண்
எல்லார்க்கு மொவ்வொன் றெளிது. (அச)

நன்னெறி.

கடலே யனையம்யாங் கல்வியா லென்னும்
அடலே றனையசெருக் காழ்த்தி —விடலே
முனிக்கரசு கையா ன் முகந்து முழங்கும்
பனிக்கடலு முண்ணப் படும். (அரு)

---

## செல்வம்.

—:o:—

கந்தபுராணம்.

அளப்பருங் கல்வியு மாக்கம் யாவையுங்
கொளப்படு தன்மையிற் குறைவு றுதவை
வளர்த்தலின் மேதக வனப்புச் செய்தலிற்
கிளத்திடின் மேலது கேடில் செல்வமே. (அசு)

வளையாபதி.

குலந்தருங் கல்வி கொணர்ந்து முடிக்கும்
அலந்த கிளைக ளழிபசி நீக்கும்
நிலம்பக வெம்பிய நீள்சுரம் போகிப்
புலம்பில் பொருடாப் புன்கண்மை யுண்டோ. (அஎ)

சிந்தாமணி.

பொன்னி னாகும் பொருபடை யப்படை
தன்னி னாகுந் தரணி தரணியிற்
பின்னை யாகும் பெரும்பொரு ளப்பொருள்
துன்னுங் காலைத்துன் னாதன வில்லையே. (அஅ)

---

## செல்வச்செருக்கு.

—:o:—

நசேலோபாக்கியானம்.

சிறியரே மதிக்கு மிந்தச் செல்வம்வந் துற்றகான்றே
வறியபுன் செருக்கு மூடி வாயுள்ளார் மூகராவார்
பறியணி செவியு ளாரும் பயிறரு செவிடராவர்
குறிபெறு கண்ணுளாருங் குருடராய் முடிவ ரன்றே. (அகூ)

சிவஞானசித்தியார்.

அரிசணம் பூசி மாலை யணிந்துபொன் னுடை சாத்திப்
பரிசனம் பின்பு செல்லப் பாரகர் பரிக்கக் கொட்ட
வரிசின்ன மூதத் தொங்கல் வந்திட வுணர்வு மாண்டு
பெரியவர் பேச்சு மின்றிக் கிடத்தலாற் பிணத்தை யொப்பர். ()

---

## செல்வநிலையாமை.

—:o:—

பாரதவெண்பா.

தீயாலோ நீராலோ தேர்வேந்தர் தம்மாலோ
மாயாத தெவ்வர் வலியாலோ—யாதாலோ
இப்பொருள்போய் மாய்கின்ற தென்றுபொருள் வைத்தார்கள்
எப்பொழுது நீங்கா ரிடர். (௯௧)

---

## யாக்கைநிலையாமை.

—:o:—

செவ்வந்திப்புராணம்.

மின்போலழியும் வயிற்றுமை வடிவாயழியு மெய்யுருவாய்
முன்போலழியும் பிறந்தழியு மடவாருடனே முயங்கியதன்
பின்போயழியும் நரைத்தழியும் பேய்போற்றிரிந்து பெயர்ந்தழியும்
பொன்போல் வளர்த்து மிவ்வுடல நிலையாதழிந்து போய்விடுமே.(௯௨)

சிவானுபவசாரம்.

மண்ணி லரசாகி மாண்டார்க் களவுளவோ
விண்ணி லரசாகி வீந்தோரை—யெண்ணியெவர்
சாற்றுவார் தின்வானு டாவாதே லோவாதே
போற்றுவா யிந்தப் புரம். (௯௩)

திருவிளையாடற்புராணம்.

நாய்நம தெனநரி நமதெ னப்பிதா
தாய்நம தெனநமன் றனதெ னப்பிணி
பேய்நம தெனமன மதிக்கும் பெற்றிபோ
லாய்நம தெனப்படும் யாக்கை யாரதே. (௯௪)

சூளாமணி.

எரிபுரை யெழில தாய விளந்தளி ரிரண்டு நாளின்
மரகத வுருவ மெய்தி மற்றது பசலைகொண்டு
கருகிலை யாகி வீழ்ந்து கரிந்துமண் ணாதல் கண்டும்
வெருவிலர் வாழ்து மென்பார் வெளிற்றினை விலக்கலாமோ. (௯௫)

---

## இளமைநிலையாமை.

—:o:—

வளையாபதி.

வேற்கண் மடவார் விழைவொழிய யாமவரைக்
கோற்க ணெறிகாட்டிக் கொல்கூற் றுழையதா
நாற்ப திகந்தா ணரைத்தூது வந்ததினி
நீத்த றுணிவாய் நிலையா திளமையே. (௯௬)

### சிந்தாமணி.

முருந்தனைய தூமுறுவன் முற்றிழையார் சேரி
இருந்திளமைக் கள்ளுண் டிடைதெரித லின்றிக்
கருந்தலைகள் வெண்டலைக ளாய்க்கழியு முன்னே
அருந்தவமுந் தானமு மாற்றுமினே கண்டீர். (கூஎ)

## ஈசுரபத்தி.

—:o:—

### சிவஞானப்பிரகாசம்.

மங்கையர்தம் யோனிமிசை வைத்திருக்கு மாசைதனைப்
பங்குசெய்து நூற்றிலொரு பங்கெடுத்துக்—கங்கையணி
வேணியான் பாதார விந்தத்தில் வைத்தக்காற்
காணலாங் காணுக் கதி. (கூஅ)

### தேவாரம்.

விறகிற் றீயினன் பாலிற்படு நெய்போன்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்
உறவுக் கோனட் டுணர்வுக் கயிற்றினான்
முறுக வாங்கிக் கடையமுன் னிற்குமே. (கூகூ)

## பேரின்பம்.

—:o:—

மந்திரவாட் பெற்றும் பகைவெல்லான் மற்றதுகொண்
டந்தோ தன்மெய்யை யரிந்தான்போன்—றிந்தவுடல்
கொண்டுமுத்தி செல்லுங் குறிப்பின்றிச் சிற்றின்பங்
கண்டுவினைக் காளாங் கணக்கு. (க00)

### கந்தபுராணம்.

காடு போந்தன னிந்திரன் பொன்னகர் கரிந்து
பாடு சேர்ந்தது சயந்தனுஞ் சிறையிடைப் பட்டான்
நாடில் விண்பதச் செய்கையீ தெம்பிரா னல்கும்
வீட தேயலாற் றுன்பறு மாக்கம்வே றுண்டோ. (க0க)

முற்றிற்று.



உ

# விக்கிரய புத்தக விஞ்ஞாபநம்.

| | | ரூ. | சத. |
|---|---|---|---|
| க. | தொல். எழுத்ததிகாரம். நச்சினார்க்கினியம்... ... ... ... | க. | ருo |
| உ. | ,, சொல்லதிகாரம். நச்சினார்க்கினியம்... ... ... ... | க. | ருo |
| ங. | கலித்தொகையுரை. நச்சினார்க்கினியம்... ... ... ... ... | ங. | ருo |
| ச. | சூளாமணி. (சமணகாவியம்.) ... ... ... ... ... ... | க. | ருo |
| ரு. | சூடாமணி நிகண்டு. கஉ. தொகுதியும்... ... ... ... ... | க. | oo |
| சா. | இதோபதேசம். இது பஞ்சதந்திரத்திலும் பல நூல்களிலுமிரு ந்து திரட்டப்பட்ட நீதிவாக்கியங்களையும் அவற்றிற் கியை ந்த விநோதமான கதைகளையு முடையது... ... ... ... ... | | ருo |
| எ. | யாப்பருங்கலக்காரிகையுரை. யாவரும் எளிதில் உணரும்படி விடயங்களைப் பிரித்தும், அநாவசியகமான சிலவற்றை வில க்கியும், ஆவசியகமான சிலவற்றைக் கூட்டியும், பலவாறு புதுக்கி விளக்கியது... ... ... ... ... ... ... ... ... | | ருo |
| அ. | இலக்கணசந்திரிகை. நன்னூல் முதலிய இலக்கணங்களிலே அமையாது பாரதம் இராமாயணம் முதலியவைகளிலே வ ரும் பலவித சொற்பிரயோகங்களுக்கு இலக்கணங்களை விள க்குவது... ... ... ... ... ... ... ... ... ... ... | | உரு |
| கூ. | மேகதூதக்காரிகை. இயக்கன் ஒருவன் தன் மனைவிக்குக் கார் காலத்து முகில்வாயிலாகத் தூதுசொல்லி விடுத்ததாகப் பல வித வர்ணனைகளமைத்து வடமொழியிலே காளிதாச மகா கவிசெய்த மேகதூதத்தின் மொழிபெயர்ப்பாய்க் கட்டளைக் கலித்துறையிற் செய்தது. போசராச காளிதாச சரித்திரச் சுருக்கமும் முகவுரையிலுண்டு... ... ... ... ... ... ... | | உரு |
| கo. | சூடாமணிநிகண்டு. க-வது. சொற்பொருளோடு ... ... ... ... | | உரு |
| கக. | சூடாமணிநிகண்டு. உ-வது. சொற்பொருளோடு ... ... ... ... | | ஙo |
| கஉ. | நகுலமலைக்குறவஞ்சிநாடகம்... ... ... ... ... ... ... ... | | ஙo |
| கங. | ஆசாரக்கோவை. சங்கச் செய்யுள்களாகிய நாலடியார் முதலிய பதினெண்கீழ்க்கணக்குள் ஒன்றாயும் பலவித ஆசாரங்களைச் சொல்வதாயு முள்ளது. ... ... ... ... ... ... ... ... | | சo |
| கச. | ஏகவிருத்தபாரதாதி. இதன்கண் ஒவ்வொரு விருத்தத்திலே பாரதராமாயணசரிதமும் பலவித விநோதசித்திர வினாவுத்த ரக்கவிகளும் சிவத்தோத்திரமுமுள்ளன... ... ... ... ... | | அ |
| கரு. | மிலேச்சமதவிகற்பக்கும்மி... ... ... ... ... ... ... ... | | கo |
| கசா. | நகுலேசுவரரூஞ்சலூஞ் தசகமும்... ... ... ... ... ... ... | | சா |
| கஎ. | யாப்பருங்கலப்பொழிப்புரை, வெண்பாப்பாட்டியல்.... ... ... | | ஙo |
| கஅ. | நான்மணிக்கடிகை... ... ... ... ... ... ... ... ... | | சா |
| ககூ. | சதாசாரக்கவித்திரட்டு. ... ... ... ... ... ... ... ... | | கஉ |

தபாற்கூலி வேறே.

இங்ஙனம்,

சுன்னாகம்: }
சார்வரிஸ்ரூ ஆனிமீ. } அ. குமாரசுவாமிப்பிள்ளை.